[27th September 1958

THE HON. SRI M. A. MANICKAVELU : புகாரைப்பற்றித் தான், அது ஆதாரமில்லாதது என்று சொன்னேன். அன்றையதினம் அந்த ஆஸ்பத்திரியில் இறந்தவர் ஒருத்தர், அவர் கிறிஸ்தவர் அல்ல. பேஷண்டுகளுக்கு ஸ்பிரிசுவல் கான்ஸொலேஷனுக்கு, முன்னதாகச் சொன்னால், ஆர்.எம்.ஒ. அவர்கள் ஏற்பாடு செய்வார்கள்.

*Bridges on Cuddalore-Chittoor Road*

*567 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கடலூரிலிருந்து சித்தூர் செல்லும் ரோடில் 100-வது மைலில் படவேடு ஆற்றின் குறுக்கேயும், கன்னமங்கலம் அருகே 106-வது மைலில் ஒரு பாலமும் கட்ட எவ்வளவு தொகை அனுமதிக்கப்பட்டது ?

(ஆ) அவைகளின் வேலைகள் ஆரம்பிக்கப்பட்டாகிவிட்டனவா ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Rs. 3,60,000 for the bridge across the Padavedu river and Rs. 2,91,600 for the bridge near Kannamangalam.

(*b*) Investigation of the works is over and detailed estimate for the first bridge and revised estimate for the second bridge are under preparation. Actual execution will be commenced immediately after the estimates are technically sanctioned and preliminaries such as inviting tenders, execution of agreements, etc., are attended to.

SRI S. M. ANNAMALAI : ஸாங்ஷன் ஆகி இரண்டு ஆண்டுகள் ஆகியும், வேலை துவக்காமல் ஏன் தாமதமாகின்றது ?

THE HON. SRI P. KAKKAN : ஒரு பாலம் கட்டுவது என்றால், அதை நன்றாகப் பார்த்துச் செய்ய வேண்டும் ; பிற்பாடு குறைகள் வரக் கூடாது அல்லவா ?

*Pernambattu Panchayat*

*568 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ஸ்தலஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) வடஆற்காடு ஜில்லா, பெர்ணம்பேட்டு பஞ்சாயத்து போர்டு கணக்கை ஆடிட் செய்து எத்தனை வருடங்களாகிறது ?

(ஆ) அதற்கு காரணம் என்ன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) & (*b*) The audit of the accounts of the Pernambut Panchayat from 1st November 1953 to 31st March 1956 could not be done as certain records and registers were not available for audit. The audit of the accounts of the panchayat for 1956–57 was however completed, and the audit report was issued in July 1958.

SRI V. K. KOTHANDARAMAN : பெர்ணம்பட்டு பஞ்சாயத்து கணக்குகளை சரிபார்க்காததால் ஊழல் ஏற்பட்டது. அந்தக் காரணத்திற்காக கணக்கு புத்தகங்கள் கோர்ட்டிலே இருந்தன. இப்பொழுது இம்மாதிரி, ஆடிட் இல்லாமல் இருந்துகொண்டேயிருந்தால், மேலும் மேலும் ஊழல்கள் ஏற்பட ஏதுவாகும் என்ற காரணத்தினால், வருடா வருடம் அந்தக் கணக்குகளை ஆடிட் செய்ய சர்க்கார் முயற்சி செய்யுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : ரெஜிஸ்தர் முதலியவை கோர்ட்டிலிருந்ததால் கணக்குகள் ஆடிட் செய்யப்படவில்லை. இப்பொழுது அவை திரும்பி வந்துவிட்டதால், இந்த வருடத்தில் ஜூலை 1958-ல் ஆடிட் செய்யப்பட்டிருக்கிறது.